[21st January 1961

னுடையவும் ஆசிரியர்களினுடையவும் தகராறுகள் காரணமாகத் தான் இந்தப் பாடம் கற்றுக் கொடுப்பது நிறுத்தப்பட்டது என்று சொல்லப்படுவது உண்மையா ? இது விஷயமாக அரசாங்கத்திற்கு எழுதியிருந்ததின் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது கனம் அங்கத்தினர் அவர்களின் கற்பனையாகவோ அல்லது வேறு நபர்களின் கற்பனையாகவோ இருக்கலாம்.

*Water-supply to Jayankondan*

* 55 Q.—SRI S. LAZAR (on behalf of SRI K. R. VISWANATHAN :) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether there is any proposal under the Third Five-Year Plan to provide protected water-supply to Jayankondan town from Coleroon under the Comprehensive Water-supply Scheme;

(b) if so, the cost of the scheme; and

(c) the proportionate cost borne by the Panchayat Board, Jayankondan?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) No, Sir.

(b) & (c) Do not arise.

SRI S. LAZAR : இந்த ஜெயங்கொண்டபுரத்திற்கு தண்ணீர் வசதி செய்து கொடுக்கவேண்டும் என்ற கோரிக்கை அரசாங்கத்திற்கு வெகு காலத்திற்கு முன்பே கொண்டு வரப்பட்டிருக்கிறது. இதற்கு பல இடங்களிலிருந்தும் தண்ணீர் கொண்டுவரலாம் என்று சொல்லப்பட்டது. அப்படியானால் இங்கு தண்ணீர் கொண்டுவரும் திட்டத்தை தனியான ஒரு திட்டமாக அரசாங்கம் எடுத்துக் கொள்ளாததற்கு காரணம் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : This will come under the urban water-supply scheme. By the end of the Second Plan 50 municipalities and 14 major panchayats will have protected water-supply. During the Third Plan period all the municipalities in the entire State, viz., 66 municipalities and 41 major panchayats will have protected water-supply. I find Jayankondan is not one of the places included. If the Panchayat comes forward with sound financial resources, then the matter will be looked into.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : ஸார், ஜெயங்கொண்டான்புரம் பகுதிக்கும் உடையார்பாளையம் பகுதிக்கும் குடி தண்ணீர் கஷ்டம் அதிகமாக இருப்பதினால் அப்பகுதி மக்கள் பல வியாதிகளுக்கு ஆளாகின்றனர். சிலந்தி போன்ற வியாதிகள் அங்குள்ள மக்களுக்கு வருகின்றது. இதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்களிடத்தில் நேரிலேயே காட்டப்பட்டது. ஆகவே, அந்த இடங்களுக்கு கொள்ளிடத்தில் இருந்து லோயர் அணைக்கட்டு கீழ் புறம் மேல் புறத்திலிருந்து தண்ணீர் கொண்டு

21st January 1961]

வர வசதியிருக்கிறது என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இதைப்பற்றி சீக்கிரமாகவே ஆலோசனை செய்து அங்கு அவதிப்படும் மக்களுக்கு, அவர்களுக்கு இருந்து வருகின்ற இந்த தொல்லையை நீக்குவதற்கு சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது எங்கே யிருந்து தண்ணீர் கொண்டு வருவது என்பது பிரச்னை அல்ல. எங்கிருந்து பணத்தைக் கொண்டு வருவது என்பதுதான் பிரச்னை.

SRI K. VINAYAKAM : ஸார், ஜெயங்கொண்டான்புரம் என்ற பெயர் வந்ததே அன்றைய அரசன் வடக்கே சென்று கங்கைத் தண்ணீரைக் கொண்டு வந்ததாக கதைகள் கூறுவதுதான். இந்த அடிப்படையில்தான் ஜெயங்கொண்டான்புரம், கங்கை கொண்டான் என்ற பெயர்கள் எல்லாம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இப்போது கங்கையிலிருந்து கொண்டு வராவிட்டாலும் சமீபத்திலிருந்து கிடைக்கின்ற தண்ணீரை கொண்டு வந்து கொடுப்பதற்கு எங்கிருந்தாவது பணத்தை கொண்டு வருவதற்கு சர்க்கார் முயற்சிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கண் இல்லாத குருடனுக்கு கண்ணப்பநாயனுர் என்ற பெயர் இருப்பதை நாம் பார்க்கிறோம். (சிரிப்பு.)

SRI S. LAZAR : In the list of priorities read out by the Hon. Minister there are names of municipalities and panchayats which are already having drinking water-supply and yet provision is being made for giving them protected water-supply. So far as Jayankondan is concerned, there is no drinking water available there, leave alone protected water-supply. In view of this acute condition will the Government provide necessary funds and take up the scheme so far as Jayankondan is concerned.

THE HON. SRI M. A. MANICKAVELU : If the Panchayat moves in the matter, the matter will be looked into.

*Anti-Hindi agitation by the Students*

* 56 Q.—SRI S. M. ANNAMALAI : **கனம்** முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 16–8–1960-ந் தேதி இந்தி எதிர்ப்பு கோஷமிட்டுக் கொண்டு ஊர்வலமாக வந்து சென்னை சட்டக் கல்லூரி மாணவர்களும், பச்சையப்பன் கல்லூரி மாணவர்களும் முதல் அமைச்சர் அவர்களைச் சந்தித்தார்களா ?

(இ) அப்படியானல் அவர்கள் கோரியது என்ன ?